முருகன்றுணை.

# திருப்போரூர் வெண்பா.

ஸ்ரீ தேவஸ்தானம்
சிதம்பரசுவாமிகள்
ஆதீனம் - ௩ - ஆவது பட்டம்
முத்துக்குமாரதம்பிரான்
அவர்கள்அனுமதியின்
ஏதுவாய்
காஞ்சிபுரம் - சபாபதிமுதலியார்
அவர்கள்மாணாக்கர்
புரசை - அஷ்டாவதானம்
சபாபதிமுதலியார்
இயற்றியது.

---

இஃது
கடலூர் - சுமோதத்திரியதாரி
அப்பாசாமிமுதலியார் சகோதரர்
வேதகிரிமுதலியாரவர்களால்
புங்கத்தூர்
ம - சபாபதிமுதலியாரது
கல்விவிளக்க அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டு
இந்நூலாசிரியர் இயற்றமிழ்மாணாக்கர்
கந்தாடை
துரைசாமிஐயங்காரால்
நிறைவேறியது.

பிரமோதூத ௵ கன்னிமதி.
௧௮௭௦ ௵ செப்டம்பர்மீ.

முருகன் துணை.

# திருப்போரூர் வெண்பா.

## வேம்படி விநாயகர்

### காப்பு.

சீர்வருகூர்வேலர்திருப்போரூர்மாலைசொல
நேர்வருமென்னெஞ்சமேநின்மலனூர்—ஆர்வமிக
வாம்படிவிநாயகனையாறுமுகனார்துணைவர்
வேம்படிவிநாயகனைவேண்டு.

மாமணிசூழ்கோபுரஞ்சீர்வாய்ந்தவிராட்புருடன்
பூமணிசூழ்மோலியெனும்போரூரே—தாமப்
பணிகைவளையாபரிந்தளித்தவேலர்
தணிகைவளையார்தலம். (க)

வேதகிரியோமெழுத்துவெற்புவிராட்டிருதோட்
பூதகிரியாயோங்கும்போரூரே—ஓதகிலம்
பாரித்தபோதகத்தார்பண்டிறங்கவோமருத்தம்
பூரித்தபோதகத்தார்பொற்பு. (உ)

பொற்பரவைநற்பரவைபோலிடையும்வாட்கணுங்கொள்
பொற்பரவையிற்பயிலும்போரூரே—சொற்பரவை
யாழங்கண்டாதரிப்பாரல்லல்செயும்வல்வினையின்
ஊழங்கண்டாதரிப்பாரூர். (ங)

ஆசையிருந்தவரோடண்டருமாடிக்கொருநாட்
பூசைபுரிந்திறைஞ்சும்போரூரே—ஓசைதரு
வானநிலமாவார்வளரொழுநாவன்னியொடு
மானநிலமாவார்மனை. (ச)

சேணுருங்கற்பகத்திற்சேரவரமாதரிடும்
பூணுரந்தாங்குபொழிற்போரூரே—வீணூர்வம்
உள்ளிமணாளன்புரூர்தொழுந்தெய்வப்பிடிவாழ்
வள்ளிமணாளன்மனை. (ரு)

போதகத்தனற்கோட்டுப்போதகத்தன் சூழ்கயிலைப்
போதகத்தன்மன்னுதிருப்போரூரே—மோதகக்கை
யாதிவரப்புணர்ந்தார் அன்றுகுறமாதையறு
பூதிவரப்புணர்ந்தார்பொற்பு. (சு)

பூவையனையீன்றமலர்ப்பூவையனைமாரிதுறை
பூவையனையார்போற்றும்போரூரே—ஆவரண
வஞ்சமலர்த்தொட்டிலார்வான்சரவணத்தினிற்பொற்
கஞ்சமலர்த்தொட்டிலார்காப்பு. (எ)

புற்றுளிகற்பணியாப்பூங்குருந்தையேங்கமந்தி
புற்றுளிகாட்டுந்துறைப்போரூரே—வற்றுத
தங்கருணைவைப்பார்தடங்கோபுரவடபாற்
றங்கருணைவைப்பார்தலம். (அ)

பூவைமேவுகாவிவாவிபூவைவாவுமாவுலாவு
பூவைமேவுகாவிராவுபோரூரே—கோவையார்
பாடப்பதித்துவைத்தார்பாலிக்கவெஞ்சூர
னோடப்பதித்துவைத்தாரூர். (கூ)

சாருமாடம்வித்தகம்வெண்டார்புத்தகங்கொண்டு
பூரவாகனிக்குநிகர்போரூரே—வாரிதிசூழ்
செந்திற்பதியார்தினந்துதியார்புன்மனமாம்
அந்திற்பதியாரகம். (க0)

மால்பெற்றுத்தாமரைமேன்மன்னிநால்வாய்தாங்கியய...
போல்வெற்புநீடுதிருப்போரூரே—சால்வெட்சிப்
பூவைத்தரித்தார்புலவர்க்காமாவையரு
ளேவைத்தரித்தாரிடம். (கக)

பாசிழையரம்பைமென்பொற்பைந்தருநயந்தமுத
போசனமால்சோலைநிகர்போரூரே—நேசத்
திருவேரகத்தார்இயல்தாரகத்தார்
திருவேரகத்தார்செறிவு. (கஉ)

மாசடையார்வாண்மதியால்மாமறையாற்சங்கமதாற்
பூசுரர்மும்மூர்த்தியெனும்போரூரே—தேசுதிகழ்
ஆறுபடைவீட்டார்அடற்சூரனுலமரர்
வீறுபடைவீட்டார்வியப்பு. (கங)

தாக்கற்றநோக்குடையார்தாமிறைஞ்சமீட்சியொடு
போக்கற்றவாக்கமல்கும்போரூரோ—மூக்கின்
இளைத்தவந்தணத்தாரிறைஞ்சுபரமன்பா
துளைத்தவந்தணத்தாருவப்பு. (கச)

ஆரணர்க்குநாரணர்க்கும்யார்க்குமயிலோன்சேவை
பூரணத்தினல்குதிருப்போரூரோ—காரணத்திற்
காரியமூன்றினார்காணும்பதிமுதலாச்
சீரியமூன்றினார்சேர்வு. (கரு)

கள்ளவித்தையாற்றசுரர்கார்வரையின்முன்னொளித்த
புள்ளுருவத்தைமாற்றுதிருப்போரூரோ—கொள்ளவித்தை
யாண்டலைப்பதாகையானார்வலர்மாயாதெடுத்த
ஆண்டலைப்பதாகையானார்பு. (கசு)

செந்திருவும்வெண்பதுமஞ்சேர்திருவுமன்புசெய்வோர்
புந்திகளிக்கவரும்போரூரோ—அந்தி
நிறத்தார்க்குமெய்யாநெடுங்கலைஞானந்தேர்
அறத்தார்க்குமெய்யரகம். (கஎ)

நாதத்துவங்கடந்தநாதனைப்பூசிக்குநல்லோர்
பூதசுத்தியாதிசெயும்போரூரோ—போதசித்தி
கண்டார்க்களிப்பார்கருமாமலட்பற்று
விண்டார்க்களிப்பார்விருப்பு. (கஅ)

கற்றைநிலாவரந்தங்கண்டெனச்சாரற்பளிக்குப்
பொற்றைபலவிளங்கும்போரூரோ—வெற்றுநூல்
கத்திக்குவித்தார்கணகநில்கற்பமுந்தெரியா
க்குவித்தார்முதல். (கக)

ரப்பெருங்கரணநான்கும்பணியவையர்
ரச்சாப்பின்றித்தவஞ்செய்போரூரோ—கைச்சார்
எடுத்தபெருமானாரிடமகலாரன்பர்
அடுத்தபெருமானாரகம். (உ0)

காட்சிமுகில்தோய்ந்திருள்கூர்காமலர்கொய்மாதரொழிற்
பூட்சியொளிவிளக்காம்போரூரோ—மாட்சியொரு
காற்றுப்படையார்கருதரியகிரனுரை
[illegible] (உக)

கோகிலம்பண்கூட்டமயில்கூத்தாடக்கண்டுவரைப்
போகிமணிப்பையவிழ்க்கும்போரூரோ—ஆகமஞ்சொன்
முத்திவிடுத்தகலார்மொய்ம்மறியாற்காணுதார்
பத்திவிடுத்தகலார்பற்று. (உஉ)

வீட்டைப்பிரணவநீர்வீழ்ந்தாடிஞேர்க்கவித்தைப்
பூட்டைத்திறந்துதவும்போரூரோ—நாட்டவிளக்
கந்தாளுக்கேற்றூரதியார்திருவெனுமான்
றந்தாளுக்கேற்றூர்தலம். (உ௩)

காப்பயில்பொன்னூசலிடைக்காரிகையார்முல்லைமலர்
பூப்பநகைத்தாடும்போரூரோ—நாப்பகர்பா
வோதற்கினியார்உளையலாலென்றுளைப்போர்
காதற்கினியார்கனிவு. (உ௪)

மீதெகினங்கன்னியையமாமீனைவிழுங்குமிறும்
பூதுகண்டியாருமகிழ்போரூரோ—ஏருறும்பா
மாலைமலையார்மருவும்பழமுதிர்
சோலைமலையார்தொடர்பு. (உ௫)

காழிலவங்கம்மேலங்கார்வரையாரங்கோட்டம்
பூழின்மணம்வான்பரவும்போரூரோ—யூழெலன்
திலகுவலன்சூழ்வந்தானேங்கடருள
உலகுவலன்சூழ்வந்தானூர். (உ௬)

வெள்ளனக்குழாமெழுந்துமென்பழனத்தின்மேறி
பொள்ளெனப்பாயச்சிலம்பும்போரூரோ—கள்ளாத்
தமரக்கோட்டத்தார்அறிவரியகச்சிக்
குமரக்கோட்டத்தார்குடி. (உ௭)

வீசுகடன்முழக்கைமெய்யடியார்போற்றிசைக்கும்
பூசலடக்கிடுகும்போரூரோ—ஈசராத்
சத்திதந்தான்சத்திதந்தான்தாங்கியிருளைவெல்லுஞ்
சத்திதந்தான்சத்திதந்தான்சார்பு. (உ௮)

நட்புறமூழ்கிற்பெருக்கநல்கும்வள்ளையாரோடைப்
புட்கரிணிபாற்கடனேர்போரூரோ—உட்கும்
பொறியமலர்மாலையார்பொன்னூர்கடம்பு
நறியமலர்மாலையார்நாடு. (உ௯)

நீடணிவாவிப்பதுமநேரிழையார்மாமணிப்பொற்
பூடணம்வில்வீசமலர்போரூரோ—ஆடற்
றிரிபுரமன்றெரித்தார்சேயரன்பர்க்கட்ட
புரிபுரமன்றெரித்தார்பொற்பு. (௩௦)

கற்கடமெலாமுழன்றகாரிகைமானின்வளைசூழ்
புற்கலையாமுன்னுருவாம்போரூரோ—பொற்கிரிசூழ்
சாரற்புரந்தான்றருமெனுமாடக்கூடற்
சீரற்புரந்தான்கிளர்வு. (௩௧)

விண்டவழ்மேடத்தைவிரவியுத்தவான்கிரிமேற்
புண்டரிகங்கண்டுறவாம்போரூரோ—தொண்டர்
முருகாவென்பார்வான்முறுவனுமைமைந்தா
இருகாவென்பார்வாழிடம். (௩௨)

சேட்கவினுங்கோளரிக்குத்தேனையிருலள்ளிமலைப்
பூட்கையெடுத்தூட்டவரும்போரூரோ—யாட்கொண்டு
போற்றுநனாநோககார்பொருளாக்குவாரன்பு
மாற்றுநனாநோக்கார்மனை. (௩௩)

நன்மையெலாமெவ்வெவர்க்குநாடிப்பணியநல்கிப்
புன்மையெலாநீக்கிடருள்போரூரோ—வன்மை
மனத்தார்க்களியார்மலரடியைநல்ல
வினத்தார்க்களியாரிடம். (௩௪)

ஆகூழலாலெம்மானன்புபுரிவார்க்கென்றும்
போகூழெதிராப்படாப்போரூரோ—நாகூருங்
கந்தபுரியான்கழல்கருதிலார்கட்கு
வந்தபுரியான்மனை. (௩௫)

தன்கண்பிருகுமொழிதாங்குமலர்மகளைப்
புன்கண்கடக்கவரும்போரூரோ—மென்கருணை
யும்பாலருந்திருருள்ளுவப்பப்பார்வழியார்
தம்பாலருந்திருர்சார்பு. (௩௬)

கார்த்திகெயனைப்பணிந்துகாதற்பிரணவமுன்
பூர்த்திவரம்பெற்றமரும்போரூரோ—சீர்த்திப்
புகழ்வரம்புகன்றூர்புநிதமுறவென்று
இகழ்வரம்புகன்றூர்நிறைவு. (௩௭)

நித்தியகல்யாணமால்நின்றுடியிலிறைஞ்சப்
புத்தேளிரோடணையும்போரூரே—முத்தித்
திருவையுடையார்தெளிந்தாரையென்றூர்
கருவையுடையார்களிப்பு. (௩௮)

ஏரணிபொற்குன்றிற்சிவமுனிவாலம்பிகையாம்
பூரணியாகற்பரவும்போரூரே—தாரணியோர்
எண்ணுநரையேற்றூர்எழிற்குமரர்பொய்ம்மையினி
னெண்ணுநரையேற்றூர்நகர். (௩௯)

தாதார்ஞாழற்புதலிற்றண்மணிநாயயண்டமெனப்
போதாவடைகாக்கும்போரூரே—ஆதாரம்
ஆதேயமுன்னுவார்அண்டபகிரண்டமொடு
மாதேயமுன்னுவார்வாழ்வு. (௪௰)

கோதைமுகங்கஞ்சமென்றுகூடுஞ்சுரும்பவர்கண்
பூதையெனக்கண்டஞ்சும்போரூரே—மேதைநெறிக்
கண்ணுவர்வந்திப்பார்ககனத்துளோருய்ய
எண்ணுவர்வந்திப்பாரிசைவு. (௪௧)

கன்றமணிமாதர்நகையேய்ந்திலகவொண்மிடறு
போன்றுவளையூரும்வயற்போரூரே—வான்முடித்த
கார்த்திகையின்பாலார்ந்தார்காசினியோர்பேறாக
கார்த்திகையின்பாலார்ந்தார்காப்பு. (௪௨)

தக்கதவமுழைமுனிசார்ந்தூசிவபூசை
பொக்கமகன்றியற்றும்போரூரே—மைக்கண்
ணிகரமகரத்துவசனேராவகர
வுகரமகரத்துவசனூர். (௪௩)

அம்மடமான்கோலமகன்றுண்டாயிரந்தவந்தான்
பொம்மலொடுசெய்யாள்செய்போரூரே—செம்மை
பெறுமைக்கருத்தர்பெரியோரறியு
மறுமைக்கருத்தர்மனை. (௪௪)

ஆதவந்தணித்துநிழலாங்களித்துநல்லோனைப்
பூதவம்புள்ளுண்கனிநேர்போரூரே—மாதவஞ்செய்
தஞ்சரிக்கிருந்துணையார்ஆகலித்துப்போற்றுதெய்வ
குஞ்சரிக்கிருந்துணையார்கோட்டு. (௪௫

பார்வணங்குசெவ்வேள்பராத்தமுறையானைபுரிப்
போர்வையண்ணல்பூசைபுரிபோரூரோ—நீர்வையத்
தூனப்பேர்வாசியார்க்குற்றதுணையானார்மெய்ஞ்
ஞானப்பேர்வாசியார்நாடு. (௪௬)

பூதியணிகண்ணுவப்பேர்ப்புண்ணியனார்போற்றியநற்
பூதிவிளங்கத்தவங்கூர்போரூரோ—சோதிமணி
வீறக்கரத்தர்விசுவாதிதட்பரம
வாறக்கரத்தர்அகம். (௪௭)

மாணியனுந்தாரகப்பேர்வண்கிரியிற்சேவினமேற்
பூணியையமணந்தோங்கும்போரூரோ—வாணிபுதி
யைத்தகவினுவினார்அன்றுபொருட்டஞ்சரிதை
வைத்தகவினுவினார்வாழ்வு. (௪௮)

வேரிக்கமலதிம்பமென்மா வாவாண்டுறைந்து
பூரித்தேரம்பனருள்போரூரோ—சேர
மறப்பிறப்பற்றார்தம்வன்மனத்தின்மேவார்
பிறப்பிறப்பற்றார்தம்பெட்பு. (௪௯)

நேசித்தோராகமத்தானீள்கயிலைநாதனைமால்
பூசித்துப்பொன்மணக்கும்போரூரோ—வாசிக்க
வேதங்கொழித்தார்வியன்புகழைப்பேசுமவர்
ஓதங்கொழித்தார்செறிவு. (௫௦)

## சிலேடை.

நன்னாரியர்கொங்கைநற்றடத்தின்மாளிகையிற்
பொன்னாரமேவுதிருப்போரூரோ—பன்னாகப்
பூணம்புயத்தார்புதல்வரடியார்க்கருடானை
மாணம்புயத்தார்மனை. (௫௧)

கோபாலனன்றுவரங்கொண்டிடமேற்கொண்டு
பூபாலனந்தரிக்கும்போரூரோ—மாபாத
கங்களிலார்வந்தழைத்தார்கண்ணிருந்தாரன்பகலார்
தங்களிலார்வந்தழைத்தார்சார்பு. (௫௨)

பொன்னாகமீதுட்பொருணாகமீதளவில்
புன்னாகமன்னுதிருப்போரூரோ—முன்னாளிற்
சேர்மாவரித்தார்திருவருளின்சீர்விரித்தார்
சூர்மாவரித்தார்துறை. (௫௩)

கற்பந்திருவினருங்கார்வரைசூழும்புனமும்
பொற்பந்தினையாடும்போரூரே—அற்பங்கொ
ளின்பங்குறைத்தார்க்கிணங்காரடியார்க்கென்
றன்பங்குறைத்தாரகம். (ருச)

எண்ணியமங்குறையாரொற்றைநாமஞ்சொல்கிளிப்
புண்ணியமங்குலவும்போரூரே—யெண்ணிலா
தேறுமுகத்தாரொழிற்பன்னிருகண்ணார்
ஆறுமுகத்தாரகம். (ருரு)

மேனகையன்னார்நகைவிரலுமிசையிலுமதி
போனகம்விராவுதிருப்போரூரே—ஞானப்
பழநிமலையார்பயந்தபுதலவர்
பழநிமலையார்பதி. (ருசா)

கோதகங்கொளாமுனிவர்கோடியர்வாவிப்பணிலம்
போதகங்குலாவுதிருப்போரூரே—பாதகமொன்
றம்பணிககவைத்திடார்உன்னினைத்தாய்வேத
கம்பணிக்கவைத்திடார்காப்பு. (ருஎ)

மேகம்பயிலவயன்மேவுகயலபாயநறும்
பூகம்பொருவுதிருப்போரூரே—மூகங்கொள்
வீறுநயநத்தார்வியந்தொழவந்தருளீ
ராறுநயநத்தார்அகம். (ருஅ)

கொங்கவிழ்தார்மன்னருந்தல் கூர்பொழிலுமிக்கவரும்
புங்கவின்மருததிருப்போரூரே—கங்கையெனும்
ஈராறுகையார்இரண்டாறுகையார்சீர்
ஈராறுகையார்இடம். (ருகூ)

என்றலயத்துச்சியிற்குடையின்வாவியின்பூப்
பொன்றுதவிருந்தன்னபோரூரே—குன்றுத
பேரன்புடையார்பெருமான்றிறல்வாகு
வீரன்புடையார்விருப்பு. (சா0)

விட்டங்கணமென்னவெண்கமலையென்னவனப்
புட்டங்கயமாரும்போரூரே—நட்புப்
பெருகந்தரத்தாயிழைக்கவருளால்
வருகந்தரத்தர்மனை. (சாக)

# திருப்போரூர் வெண்பா.

மாத்தாரரசர்பான்மாமறையோரோதிமங்கள்
பூத்தானத்திற்கூடும்போரூரே—நீத்தார்தம்
உள்ளச்சினகரத்தார்ஓங்குமகிலாண்டவுயி
ருள்ளச்சினகரத்தாரூர். (௬௨)

தொக்கசிலம்பின்முகட்டிற்றொல்பதியிற்செய்திடுமன்
புக்கருணன்கதிர்க்கும்போரூரே—மிக்க
தனத்தையளித்தான்றனதுபணிக்கேற்றும்
இனத்தையளித்தான்இடம். (௬௩)

சேண்டவழ்மாடத்திற்றிருமறுகின்மாதர்தார்
பூண்டயங்கவிந்தாடும்போரூரே—ஈண்ட
திருவாவினன்குடியார்சேறூர்வரைசூழ்
திருவாவினன்குடியார்சேர்வு. (௬௪)

நீதஞ்சும்வாவிமணஞ்செய்யுணின்றணைந்துகடற்
போதஞ்சங்கூருமெழிற்போரூரே—வேதங்க
டந்தூர்க்குவந்தார்தரியலரைவாட்டமுன்றூட்
செந்தூர்க்குவந்தார்செறிவு. (௬௫)

யோகாதிபருணர்ந்துய்உத்தமர்பணிந்துமென்றும்
போகாதியாருமுறைபோரூரே—தேகாதி
[illegible] மன்றொளியார்தமரொன்றிடுகருணை
யாமமன்றொளியாரகம். (௬௬)

வெங்கதிரையஞ்சிவந்தோர்மெல்லியர்பூவல்லியிடை
பொங்கரவமாற்றுதிருப்போரூரே—சங்கரர்முன்
போதந்தெரிந்தான்புணர்ப்பிலார்க்கோதுபிர
சாதந்தெரிந்தான்தலம். (௬௭)

கல்விக்கயமுனிக்குக்காதலர்களூடலுக்குப்
புல்லிக்களிக்குந்தென்போரூரே—வல்லிக்கு
வாங்குமிடையார்மதங்கஞ்சூழ்வாரிப்படிந்தோர்
பாங்குமிடையார்பதி. (௬௮)

ஆதாரவண்டுபொழில்ஆடிமதிக்கண்டர்புறம்
போதாரவாவுமெழிற்போரூரே—வேதா
சிறைவிடுவித்தார்தெளிவுளோர்க்கியாண்டு
சிறைவிடுவித்தார்நிகம்வ. (௬௯)

வட்கவிலாமாளிகையும்வார்வயலுநன்காக்கம்
புட்கலமல்குதிருப்போரூரே—கொட்புறுபுட்
கோனிவருமாதவனூர்கூடுமெழின்மருகர்
மேனிவருமாதவனூர்வீடு. (௭0)

மாத்தமரநீள்கோயில்வண்பொழிலின்மாதரளி
பூத்தமலர்நாடுதிருப்போரூரே—தேத்தணியல்
இந்தீவரத்தார்எழிற்புயத்தார்நண்பினர்க்கு
வந்தீவரத்தார்மனை. (௭௧)

காணக்கிளர்மாடங்காரிகையார்கண்சேலைப்
பூணக்கொடிதிகழுப்போரூரே—மாணச்சூரி
வாரணனாரணனூர்வாழ்த்துமொருகோட்டுமுக
வாரணனாரணனூர்வாழ்வு. (௭௨)

தேசமனித்தரொடுதேவர்திருக்கோயிலசங்கம்
பூசமதிற்சூழுந்தென்போரூரே—வாசமலர்ச்
செய்யுளலங்காரத்தார்தெள்மதுரைக்கண்ணணர்த்துஞ்
செய்யுளலங்காரத்தார்சேர்வு. (௭௩)

ஆதரங்கொண்டோர்ந்துதொழஅச்சுரர்மிக்கண்டுதொழப்
பூதரங்கமோங்குதிருப்போரூரே—மாதரங்க
மேற்றாரளித்தாரிருக்குநதிவணியர்வெள்
ளேற்றாரளித்தாரிடம். (௭௪)

பாதகங்கைக்குந்தடமும்பைங்காந்தளுமின்னா
பூதகங்கைக்குநிரைபோரூரே—கோதகங்கூர்
வல்லசுரருக்கிசையார்வந்துசரணமெனு
நல்லசுரருக்கிசையார்நாடு. (௭௫)

காவணங்கொண்மண்டபங்கள்காரிகையாமாளிகைகள்
பூவணங்குலாவுதிருப்போரூரே—நோவணங்கு
பாற்கரனார்முன்னோர்பணிபோலச்செய்மணிக்கூரி
வேற்கரனார்முன்னோர்விருப்பு. (௭௬)

மொய்க்காதகத்தைநன்னீர்மூழ்குமுனிவோர்வைகப்
பொய்க்காதலைத்தடுக்கும்போரூரே—யெய்க்காமல்
யாவருக்குமுன்னவனார்ஆகவருள்செய்வாரொத்
தேவருக்குமன்னவனார்சேர்வு. [illegible]

சேதனக்கோலத்தவருஞ்செந்தமிழ்தேர்மாணவரும்
போதனைக்காலைக்காயும்போரூரே—வேதனையாம்
பங்கத்தமிழார்பரவுந்திருமழலார்
சங்கத்தமிழார்தலம். (எஅ)

சீரியங்கவிபாக்குநலமார்சேர்ந்தவரூநீறிநெறி
பூரியங்கூட்டுமெழுதிப்போரூரே—நேரியங்க
வீறுசெவியார்வியகருமணிப்பொற்குழைமீ
தாறுசெவியாரகம். (எகூ)

பாருவந்தயண்ணுவர்சாபந்துயர்மாமையன்மிகூறீ
புருவந்தவர்க்கறுக்கும்போரூரே—போருவந்த
காதகனைமைந்துறகைந்தார்காப்பரியவேள்விவரு
மாதகனைமல்றகைத்தார்வாழ்வு. (அ0)

கட்கரம்வாள்காந்தளொப்பார்கண்மருங்குலுங்குழலும்
புட்கரங்கூடிக்குந்தென்போரூரே—நட்கவரும்
அன்பர்க்கணியார்அருணெறிநோக்கிப்பணியா
வன்பர்க்கணியார்மனை. (அக)

காக்குமைப்பர்கட்குதமியோகர்க்குமருள்போகப்
போகியர்க்கொல்லுஞ்சீர்ப்போரூரே—நோக்கி
விலகாதவர்மெய்யாமின்ஞானவொள்வேல
இலகாதயர்வெய்யாவிபடு. (அஉ)

ஓவாவெழுமலர்க்காவொண்ணுதலார்காரளகம்
பூவாட்கொழுநனையேய்ப்போரூரே—மூவாசை
மாதாகமழித்தார்வாழ்மனத்தையாதரித்தார்
வேதாகமவித்தார்வீடு. (அங)

அல்லகஞ்சூழ்பெற்றதிவையாலையிரதத்தைமள்ளர்
புல்லகண்டமாக்குதிருப்போரூரே—வல்லநந்தை
நீத்தார்புனைவார்நிழல்செய்செற்றிலார்நீப
மாத்தார்புனைவார்மனை. (அச)

மைக்கலைக்கண்ணூர்தனமுமாளிகையுமன்னியவெற்
புக்கலைக்கின்றதிருப்போரூரே—மிக்கலைக்கும்
கோதஞ்சுவற்றினர்கூர்தவமிடேறவலை
யோகஞ்சுவற்றினார்.  (அ...)

நெஞ்சத்தயாவரசர்நீள்புயமும்வில்லுமிழும்
புஞ்சத்துருவையிகல்போரூரே—அஞ்சி
முரணவமால்வரையார்மூந்தவறியாப்
பிரணவமால்வரையார்பெட்பு. (அசா)

முன்னரளிமுரன்றுமுத்தரும்பிப்பொம்மலர்ந்து
புன்னைவளமடுக்கும்போரூரே—முன்னொருமை
போதமறுத்தாபுகழ்படித்தார்மும்மலமா
மேதமறுத்தாரிடம். (அஎ)

ஓதந்தணர்மனையுமும்பர்புரைசக்கெவையும்
போதந்துவைக்குஞ்சீர்ப்போரூரே—நாதங்
கடந்தவித்தகத்தர்கலியிருளைப்பாதங்
கடந்தவித்தகத்தர்களிப்பு. (அஅ)

காமிக்குநந்தவனங்காமர்மணிநிலைத்தேர்
பூமிக்கணிசெய்யும்போரூரே—தாமிருக்கும்
வேங்கடம்பணிந்திடுவார்வேண்டுபொருளுதவுவார்
பூங்கடம்பணிந்திடுவார்பொற்பு. (அகூ)

தேம்பாய்முத்தாலடிசில்செய்பவருநாவலரும்
பூம்பாவைக்கூட்டுதிருப்போரூரே—யேம்பாமல்
யாரங்கொடுக்கார்அவர்க்குருற்றவர்க்கு
வாரங்கடுக்கார்மனை. (கூ0)

தங்கவளையானன்பில்தாரகத்தையாருமற்றிந்
புங்கவளையாக்கவரும்போரூரே—மங்கையர்பா
லார்வந்திருந்தாரவருள்ளக்கோயிலிடை
நேர்வந்திருந்தார்நிகழ்வு. (கூக)

தோகையர்கண்டந்தனத்திற்சுந்தரத்தைவள்ளல்பொன்னைப்
பூகதரங்கோங்கநல்கும்போரூரே—நாகபரா
ஆண்டகையச்சங்களைந்தார்அம்புயத்தாளைத்தருவாழ்
ஆண்டகையச்சங்களைந்தார்ஆர்பு. (கூஉ)

வேதிகைத்தூணுதலர்சூழ்வேந்தர்தரமணிப்பொற்
போதிகையோவாததிருப்போரூரே—மாதிகையோர்
வாள்வீசுமாமுனிவோர்மற்றையோர்மீதுகொடு
வாள்வீசுமாமுனிவோர்வாழ்வு. (கூ௩)

கொன்சானுமாலின்குழக்கன்றைப்பான்மடியின்
புன்காலிகான்றழைக்கும்போரூரோ—வன்காமர்
காழிக்கொடியாரகலப்பாரவர்க்கரிய
கோழிக்கொடியார்குடி. (கூச)

கோற்றொடியார்க்கொண்மலர்மேற்கொண்டகயலந்தணர்வாய்
போற்றிருக்குநீர்திருப்போரூரோ—சாற்றொருநால்
வேதத்திருக்கையார்வேலேந்தியநளினப்
போதத்திருக்கையார்போற்பு. (கூரு)

ஆந்திருமணம்பெறுசவன்றில்பிரிந்தாருருகப்
போந்திரங்கலிக்குமெழிற்போரூரோ—சேந்தமலர்க்
கஞ்சத்திருப்பார்காதலிலன்புளோரூதலைப்பட்
டஞ்சத்திருப்பாரகம். (கூசா)

நீர்த்தடத்தைவாரிசமேல்நேரிழையாராடவர்மேற்
போர்த்தலைக்கணூடுதிருப்போரூரோ—ஆர்த்தலையார்
பள்ளமிசைந்தார்பணியப்பொருளளித்தற்
குள்ளமிசைந்தாருவட்பு. (கூஎ)

தாதுட்டேனைச்சரகஞ்சார்காதலர்மாலைப்
போதுட்கவருமெழிற்போரூரோ—மாது
சிலையுருவத்திரித்தார்சீர்மருகரொள்வேன்
மலையுருவத்திரித்தார்வாழ்வு. (கூஅ)

எந்தகையமாவளமுமேத்துதமிழ்ச்சங்கமும்பல்
புத்தகமலர்ந்திடுசீர்ப்போரூரோ—மத்தகத்து
வாரணத்திறுரியார்வாய்மைபுகன்முதுநூ
லாரணத்திறுரியாரார்பு. (கூகூ)

சித்திரமின்கோயில்வலஞ்செய்யவிரதம்போற்றப்
புத்திரசம்பத்திவரும்போரூரோ—சித்தசனூர்
கூரம்பருக்கிளையார்கோமளவாமத்தர்தரு
மேரம்பருக்கிளையாரின்பு. (௧௦௦)

திருப்போரூர் வெண்பா
முற்றிற்று.

—※—

## இந்நூலில் - ருக - வது. வெண்பா முதலியவற்றிலுள்ள சிலேடைச்சொற்களுக்குப் பொருளறிவித்தல்.

ருக. பொன், ஆரம், - (தனத்தில்) பொன்மாலை. பொன், நாரம், - (தடத்தில்) அழகாகிய ஜலம். பொன், ஆர, - (மாளிகையில்) திருமகள்நிறைய - மேவும்.

ருஉ. பூ, பாலனம், - (கோபாலன்) உலகங்காத்தலை. பூ, பாசி, அனம், - மலர்கள்வெள்ளன்னத்தை - தரிக்கும்.

ருஙு. புன்னாகம் - (சுவர்க்கத்தின்மேல்) புன்னாகமரம். புலி, நாகம், - (பிரணவகிரிமேல்) புலியும், யானையும், மன்னும்.

ருச. பொற்பந்தினையாடும் - (திருவினர்) பொற்றூலாகிய பந்தைவிளையாடும். பொற்பு, அம், தினை, ஆடும் - (புனங்களில்) பொலிவுள்ளதினைக்கதிர்கள் அசையும்.

ருரு. புன்னியமங்குலவும் - (நியமந்துறையாரது) புன்னையம்அங்குஉலவும். புள், நியமம், குலவும் - கிளிப்புள் நெடுந்தருவிற்சஞ்சரிக்கும்.

ருசா. மதிபோல், நகம்- (கைவிரலில்) சந்திரன்போலும் நகங்கள். மதி, போ னகம், - (மிசையில்லில்) மதிக்கின்றஉணவுகள்-விராவும்.

ருஎ. போதகம்குலாவும் - (முனிவர்க்கு) ஞானம்குலாவும். போத, கங்கு, உலாவும் - (பணிலம்) மிகவரப்புக்களில்உலாவும்.

ருஅ. பூகம், பொருவும்-(மேகம்பயிலக) கமுகங்கள்பொருவும். பூ, கம்பு, ஒருவும் - (கயல்பாய) மலர்களை-சங்குகள்நீங்கும்.

ருகூ. அரும், புங்க, வில்மருத - (மன்னர்) அருமையாகிய அம்பும்வில்லும் நீங்காத. அரும்பும், கவின், மருத - (பொழில்) அரும்புகின்ற அழகுஒழியாத.

சா0. * பொன்றாது, அவிரும் - (குடைபோலக்) கெடாமல் விளங்கும். பொன், தாது, அவிரும் - (பூ) பொன்னிறத் தாதுடன்மலரும். * பொன்றாத, (குடைபோல) கெடாத, இரும், பெருமையாகிய, எனவுமாம்.

சாக. வனம் - புட்பம், கயம் (விண்மீன்கணம்போல) அழகுள்ளபுட்பங்கள் தடாகங்களில். அனப்புள், பங்கயம் - (வெண்கமலைபோல) அன்னப்பறவை தாமரைகளில். ஆரும்.

௬௨. பூத்தானத்தில், கூடும் - (மறையோர்) பூமிதானம்பெறுதற்குக்கூடுகின்ற. பூ, *தானத்திற்கு, ஊடும்-(ஓதிமங்கள்) மலர்களிடத்திலஊடுகின்ற * வேற்றுமைத்திரிபு.

௬௩. மலி, புக்கு, அருணன், கதிர்க்கும் - (முகட்டில்) மிகப்புகுந்து சூரியன் பிரகாசிக்கும். அம்புக்கு, அருள், நன்கு, அதிர்க்கும் - (பதியில் செட்டியும்) அன்பினுக்கு கிருபைநன்றாய் ஆரவாரிக்கும்.

௬௪. மாதர், தார், பூண், நயங்க, இரதம், ஆடும்-(மாடத்தில்) மகளிரதுதாரும் பூணும் நோக்குமாறு சந்திரன்சஞ்சரிக்கும் மாதர் - தார்பூண்டு, அயம், கவிந்தாடும், - (மறுகில) அழகுள்ள கிங்கிணிமாலைபூண்ட குதிரைகள் கவிந்துநடிக்கும்.

௬௫. போது, அஞ்சம், கூடும் - (வாவியில்) மலர்மேல்அன்னம் (மணம்) செய்யும். போதம், சங்கு, ஊரும் - (வயலினின்றும்) (கடலில்) மரக்கலங்களில சங்குகள் (சென்று) தவழும்.

௬௬. போகாது, யாரும், உறை - (யோகாதியர்) நீங்காமல் யாவரும் உறைகின்ற. போகம், ஆதி, ஆரும், உறை - (உத்தமர்) போக முதலியவற்றை நுகர்ந்து வசிக்கின்ற.

௬௭. பொங்கர், அவம், ஆற்றும் - (அஞ்சிவந்தோரை) சோலைகள் வருந்துதலை தணிக்கும் - பொங்கு - அரவம், மாற்றும் - (வல்லியிடை) சீறுகின்றபாம்பைமாற்றும்.

௬௮. புல், இகு, அளிக்கும் - (கயம், முனிக்கு - யானை, கன்றுக்கு) புல்லுகின்ற கரும்பைஅளிக்கும். புலவி, களிக்கும் - (காதலர்கள்) புலவிதீர்ந்துகளிக்கும்.

௬௯. போது, ஆர, வாவும் - (வண்டு) மலரில்அமையத்தாவும். போதார், அவாவும் - (அண்டர்) போகாதவராய்விரும்பும்.

௭௦. நன்கு, ஆக்கம், புட்கலம், மல்கும் - (மாளிகை) நன்மையாய்ச்செல்வம்நிறைவாகமல்கும். நன்கா, கம்புள், கலம், அல்கும் - (வயல்) நன்குஆகச்சங்கு அணிபோலத்தங்கும்.

௭௧. அளி, பூத்து, அமலர், நாடும்- (கோயிலில்) அன்புஉண்டாய் அமலர்கள்நினைக்கும். அளி, பூத்த, மலர், நாடும் - (பொழிலில்) வண்டுகள்அலர்ந்த மலர்களைத்தேடும்.

## ௧௬ சிலேடைச்சொற்களுக்குப் பொருளறிவித்தல்.

௭௨. சேலை, பூண், அக்கொடி, திகழும் - (மாடத்தில்) சேலை பூண்ட அக்கொடிகளாடும். சேலை, பூண, கொடிது, இகழும் - (கண்) சேற்கண்ணுடையை உபமேயிக்க மிகவும் இகழும்.

௭௩. சங்கம், பூசம், அதில், சூழும் - (தேவர்) கூட்டம் பூச நாளில்வலம்வரும். சங்கம், பூசு, அம், மதில், சூழும் - (கோயில்) சங்கச்சுண்ணம்பூசிய அழகான மதில்கள்சூழும்.

௭௪. பூதர், அங்கம், ஓங்கும், - (ஓர்நீர் தொழ) பூதர்களது அங்கம்நிலைபெறும் - பூதரம், கம், ஓங்கும் - (கண்டுதொழ) பிரணவமலை விண்மேல் அளாவும்.

௭௫. பூத, கம்மைக்கு, (நடம்) ஆம்மையாகியவான் நதிகரும். பூ, தகு, அங்கைக்கு - (கார்த்தர்) மலரையுவமிக்கத்தக்க அங்கைக்கு - நிகரும்.

௭௬. பூ, வண்ணம், உலாவும் - (மண்டபங்கள்) புட்பமயமா கக்குலாவும். பூ, அணைந்து, உலாவும், (மாளிகைகளில்) மலர்மகள் வசிக்கும்.

௭௭. பொய்க்காது, அலைத்து, அடிக்கும், - (நம் வீர்முழக்க) பொய்க்காமல் (காதகத்தைக்) கெடுத்தடிக்கும். பொய், காதலை, தடுக்கும் - (வைக) பொய்யாகிய ஆசைகளைத் தடுக்கும்.

௭௮. போதனை, காலை, காயும் - (அவர்) பிரமனையும் யமனையும்சீறும். போதம், * காலைக்கு, ஆயும், (மாணவர்) போதித்த நூல்களை வைகறையில் ஆராயும். * வேற்றுமைத் திரிபு.

௭௯. புரி, அங்கு, ஊட்டும் - (வம்பர்க்கு) இசையை அங்கேஊட்டும். புரியம், கூட்டும்- (சேர்ந்தவர்க்கு) அரசிருக்கை(நீதி நெறியைக்) கூட்டும்.

௮0. பூருவம், தவிர்க்கு, அறக்கும் - (சாபத்துயரை) பூருவத்தில்சிவமுனிகளது நிவர்த்திக்கும் - பூரு, அம், தவர், கறுக்கும -(மின்னார்) புருவம்அழகாகிய வில்லைக்கோபிக்கும்.

௮௧. புட்கரம், கடுக்கும்-(மருங்குல்) ஆகாயத்தையொக்கும். புட்கு, அரங்கு, அடுக்கும்-(குழல்) வண்டுகளுக்கு இருக்கையாய் டுக்கும்.

௮௨. போக, போக்கியம், கொடுக்கும் - (அன்பர்க்கு) (அருளுடன்-) போகபோக்கியங்களைக்கொடுக்கும். போகப்போக்கி, அங்கு, ஒடுக்கும் - (யோகர்க்குமருள்) போய்ப்படிநீக்கிடுக்கும்.

௮௩. பூவாய், கொழுநனை, ஏய் - (மலர்க்கா) பூதேவிக்குவாய்த்தநாயகனை ஒவ்வும். பூ, வாய், கொழு, நனை, ஏய் - (அளகம்) பொலிவுவாய்த்த செழும் பூவரும்புகளை அணியும்.

௮௪. புல், அகண்டம் - (சிற்றறிவை) பொருந்தியபேரறிவு ஆக்கும்-புல்லகண்டம், (மள்ளர்ஆலையிரதத்தை) சர்க்கரைஆக்கும்.

௮௫. வெற்பு, கலைக்கின்ற - (தனம்) மலைகளை மாறுபடுத்துகின்ற. எல், புக்கு, அலைக்கின்ற - (மாளிகை) சூரியனை ஊடுருவியலைக்கின்ற.

௮௬. வில், உமிழ், அம், புஞ்சத்து, உருவை, இகல்-(புயம்) ஒளிவிடுகின்ற அழகாகிய திரட்சிவடிவை மாறுகொள்ளும். (வில்லுமிழ், அம்பும்) சத்துருவை, இகல் - வில்லிலெய்யும்பாணம் பகைவரைப்பொருதும்.

௮௭. புல், நைவளம், அடிக்கும் - (அளி) புல்லியநைவளமென்னும் பண்ணைப்பாடும். (புன்னை) வளம், மடிக்கும் - புன்னைமரம் செழுமைகொள்ளும்.

௮௮. போதம், நவைக்கும் - (மனை) வேதஞானம் கோஷிக்கும். போதந்து, வைக்கும் - (உம்பர்எவையும்) கொணர்ந்து வைக்கும்.

௮௯. பூ, மிக்கு, அணி, செய்யும், (நந்தவனம்) மலர்மிகுந்து அழகுசெய்யும் - பூமிக்கு, அணிசெய்யும் - (நிலைத்தேர்,) பூதலத்திற்கு அலங்காரஞ்செய்யும்.

௯௦. பூம்பாவைக்கு, ஊட்டும் - (அடிசில்செய்பவர்) பொலிவுள்ள பிரதிமைக்கு உண்பிக்கும். பூம், பாவை, கூட்டும் - (நாவலர்) சித்திரக்கவிகளையியற்றும்.

௯௧. புங்கவரை, ஆக்க, வரும் - (அன்பில்) தேவரைப்பெருகச்செய்யவரும். புங்கம், வரையா, கவரும் - (தாரகத்தை) உயர்ச்சியுள்ள மலையாக உள்ளுணரும்.

